gistered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 30—No. 6

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'



மலர் 30 | ஹேவிளம்பி ஆனி 1957 ஜுன் | இதழ் 6

உள்ளுறை — பக்கம்

கையாடுதல் ... 161
திருமுருகாற்றுப்படை—சைவ சித்தாந்த விளக்கமே ... 167
ஞானச் செய்தி ... 177
விநாயகப் பிரபாவம் ... 185

பத்திராசிரியர் : C. M. இராமச்சந்திரன் செட்டியார், பி.ஏ., பி.எல்.
உதவிப் பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்
2, சீதாராம நகர், கடலூர் N. T.

ஆண்டுச் சந்தா ரூபா 3 — தனிப்பிரதி அணா 4

## சேக்கிழார் திருநாட்கூட்ட நிகழ்ச்சி

2—6—57 ஞாயிறு மாலை 6 மணிக்குமேல் இராயப் பேட்டை, ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில், சமாஜச் செயற்குழுக்கூட்டம் நடந்து முடிந்த பிறகு, சேக்கிழார் திருநாட் கூட்டம் சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, B. A., L. T. அவர்கள் தலைமையிற் சிறப்புற நடைபெற்றது. புலவர் - முருகவேள், M. O. L. அவர்கள் "சேக்கிழார் சிறப்பு" என்னும் பொருள் பற்றிப் பேசினார்கள். சமாஜச் செயலாளர் திரு. கோ. முத்துசாமி அவர்கள் நன்றியுரை கூறினார்கள். துணைத் தண்டலாளராகப் (I. A. S) பதவி உயர்வு பெற்று வெளியூர் செல்லும் சமாஜச் செயலாளர் திரு. கோ. முத்துசாமி அவர்களைச் சமாஜப் பெரியார் திரு. நல். முருகேச முதலியார், B. A., அவர்கள் பாராட்டி மொழிந்து வாழ்த்துரை கூறினார்கள். கடவுள் வாழ்த்துடன் கூட்டம் இனிது நிறைவேறியது.

---

Reg. M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 30 | ஹேவிளம்பி ஆனி 1957 ஜுன் | இதழ் 6

## கையாடுதல்

ஆசிரியர்

ஒருவரிடம் ஒப்படைவித்த பொருளைக் கையாடுதல் எக்காலத்திலும் எந்நாட்டிலும் குற்றம் என்னப்படும். அதற்கு நாட்டுச் சட்டம் தண்டனை விதிக்கும். ஒப்படைவித்த பொருள் சொத்தாகவும் இருக்கலாம் பணமாகவும் இருக்கலாம். தன்னுடையது அல்லாததைத் தான் பயன் செய்துகொண்டால் அது குற்றம் ஆகும். மேலும் ஒரு நோக்கத்தைக் கருதிக் கொடுத்த பொருளை அந்நோக்கத்திற் கல்லாது வேறு நோக்கத்திற்குச் செலவழித்தாலும் அதுவும் குற்றமே. செலவழித்த நோக்கம் தனக்குப் பயன்படா விட்டாலும் அதன் குற்றத்தன்மை போகாது. தண்டனை மட்டும் குறைவுபடும். ஒரு செயலுக்காகக் கொடுக்கப்படும் பொருளோ பணமோ அச்செலவில் குறைவாகப் பயன் படுத்தியிருப்பின் செலவாகாத பங்கு களவின் பால்படும். அதற்கும் தண்டனை உண்டு. இந்தவகையில் எந்நாட்டிலும் சட்டத்தின் செயல்முறை நடத்தப்பெறும்.

இந்தக் குற்றமுறை இரண்டு வகைப்படும். தனி மனிதனிடம் கையாளுதல், பொதுச் சொத்தில் கையாடுதல் என இரண்டாகப் பிரிக்கலாம். இரண்டிலும் குற்றம் ஒரே தன்மையாக இருந்தாலும், அதன் தண்டனை ஏற்றத்தாழ்வாக இருக்கும். தனி மனிதனிடம் கையாடுதலைக் காட்டிலும் பொதுச் சொத்துக்களில் கையாடுதல் பெருந் தண்

டனைக்கு உட்படும். தனி மனிதனுக்கு ஏற்படும் கெடுதி பிறரைப் பாதிக்காது. பொதுச் சொத்தில் ஏற்படும் கெடுதி பொதுமக்களைப் பாதிக்கும். ஆகவே தண்டனையும் பெரிதாகும். இனி பொதுச் சொத்து என்றால் ஒரு சமூகம், அரசியல், சமய நிலையம் முதலிய பலவும் சேரும். இப்படிப்பட்ட பொதுச் சொத்துக்களில் வெகு எளிதில் கையாடல் நடக்கும். தனிமனிதன் தானே குற்றம் ஏற்படாமல் பாதுகாத்துக் கொள்வான். பொதுச் சொத்துக்களில் அவ்விதமான பாதுகாப்பு இல்லை. ஆகவே அங்கே கணக்குகளை அடிக்கடி மேற்பார்வை பார்க்கவும் சோதிக்கவும் தக்க ஆட்களை நியமிப்பது வழக்கமாகிவிட்டது. சமூக சேவைகளில் பாதுகாப்பு குறைவாக இருக்கும். ஆற்று நீர் எனக் கருதி, களவு மிகுதியாக ஏற்படக்கூடும். அரசியலில் பாதுகாப்பு அதிகம் அப்படியிருந்தும் கையாடுதல் மிகுதியாகிக் கொண்டு வருகிறது. சமய நிலையங்களிலோ சொல்ல முடியாது. கையாடல்களுக்கு அளவில்லை. அண்மையிலே அரசியலில் காணும் குற்றங்கள் பெருகி வருகின்றன. மிகுந்த ஊதியம் பெறும் தலைவர்களும் கூட இந்தக் குற்றங்களைச் செய்து வருகிறார்கள். தண்டனைகளும் ஏற்படுகின்றன. சமய நிலையங்களில் பொதுவாகக் கோயில் நிர்வாகங்களில் குற்றங்கள் நிரம்பச் செய்யப்படுகின்றன. அவைகளுக்குத் தடுப்புக்கள் நிரம்ப வேண்டியிருக்கின்றன.

தனி மனிதர்களாயினும் அரசியல் ஆயினும், தடுப்பு முறைகளும் பாதுகாப்பும் தண்டனைகளும் நிரம்ப இருக்கின்றன என்றோம். சமய நிலையங்களில் அவைகள் குறைவு என்று எண்ணுகிறோம். சமய நிலையங்களில் மக்களுக்கு மிகுந்த நம்பிக்கை எப்போதும் உண்டு. ஆகவே அங்கே கையாடுதல் ஏற்படுவதற்கு அதுவே பாதுகாப்பாக இருக்கும். ஆனாலும் நன்றாய் ஊன்றிக் காணுமிடத்து அங்கேயும் கையாடல்கள் பல நடந்திருக்கின்றன. இதற்கு வரலாற்றுச் சான்றுகள் இருக்கின்றன. இலக்கியங்களில் மட்டும் அல்ல, கல்வெட்டுக்களிலும் சான்றுகள் இருக்கின்றன. கடவுள் அன்பில் மிகச் சிறந்திருந்த சோழ பாண்டியர்கள் நாளிலும் கூட இவ்விதக் கையாடல்கள் நடந்து தண்டனைகளும் ஏற்பட்டிருக்கின்றன. ஆகவே தற்காலத்தில் சமய நிலையங்களில் கையாடல்கள் ஏற்படுவது வியப்பல்ல.

இலக்கியங்களில் காணும் கையாடல்கள் சிறிது வேறு பட்டவைகள். கடவுள் அன்பினல் உலக வழக்கை மீறின பெரியார்கள் தங்களுக்கு என்று பயன்படுத்திக் கொள்ளா மல் இறைவனுக்காகத் தாம் பெற்ற பணத்தைச் செலவழித் துத் தண்டனை அடைந்தும் பின்னல் மன்னிக்கப்பட்டும் தொழப்படுவதும் காண்கிறோம். இந்த வகையில் சேர்ந்தது மாணிக்கவாசகர் வரலாறு ஆகும். பாண்டியனுக்காகக் குதிரை வாங்கச் சென்று இறைவனல் ஆட்கொள்ளப் பெற்று உலகையே மறந்து இறைவனுக்கு ஆலயங்களை எழுப்பி நோக்கத்தை மாற்றினது அதன் உட்கிடையாகும். இங்கே பாண்டியன் தண்டிக்கின்றான். இறைவன் ஆட் கொண்டு நரிகுதிரை ஆக்குதல், வெள்ளம் பெருக்கச் செய் தல் முதலிய அற்புதச் செயல்களில் பாண்டியன் உண்மை அறிந்து விடுதலை செய்து வழிபடுகிறான். இது கடவுள் அன் பின்பால்பட்டது.

இவ்வரலாற்றைப் போலவே ஆந்திர நாட்டில் பத்திரா சலத்தில் நடந்த இராமதாசர் வரலாறும் அமைந்தது. தாசில் தாரராக இருந்து நவாபிற்காக வாங்கின வரிகளைப் பத்திரா சலம் இராமபிரான் கோயில் கட்டுவதற்காகச் செலவு செய் யப்பட்டது. அதனை அறிந்த நவாப் இராமதாசரைத் தண் டிக்கிறார். இராம லட்சுமணர் வந்து நவாபிடம் செலவான பணத்தைத் தருகின்றனர். நவாப் இராமதாசரின் பக்தியை மெச்சி விடுதலை செய்கின்றான். இதுவும் கடவுள் அன்பின் பால் பட்டது. இப்படிப்பட்ட வரலாறுகள் மிகக் குறைவு. திருமங்கையாழ்வார் கொள்ளையடித்தும் புத்த விக்கிரகங் களைக் களவாடி உருக்கியும் திருமாலுக்குத் திருப்பணிகள் செய்ததும் இந்த பக்தியின் பொருட்டாக எண்ணப்படு கின்றன. இந்த வகையில் குற்றங்கள் மன்னிக்கப்படு கின்றன.

இனி வரலாற்றுப் பகுதிகளில் கோயில் நிருவாகங் களில் கையாடல்கள் நடந்திருக்கின்றன என்றும் அவை களைப் பரிசோதித்துக் குற்றம் செய்தவர்களைத் தண்டிக்க அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர் என்றும் அவர்கள் விசா ரித்துத் தண்டனை தந்தார்கள் என்றும் கல்வெட்டுக்களின் சான்றுகள் கூறுகின்றன. கி. பி. 985–1014 வரை ஆண்ட முதல் இராசராசன் காலத்தில் சிவாலயத் திருப்பணிகள்

நிரம்ப நடந்தன என்று காண்கிறோம். அவ்வாறு கட்டப் பட்ட ஆலயங்களில் நிபந்தனைகள் ஏற்பட்டுப் பற்பல நில, பண, வரி தானங்கள் தரப்பட்டன. அவைகளை ஒழுங்கு பெற ஆலய அதிகாரிகள் நடத்தக் கடமைப்பட்டிருந்தார் கள். ஆனால் கடமை பிறழ்ந்து கையாடல்கள் நடைபெற்ற வகையில் மதுராந்தகன் கண்டராதித்தனார் என்ற ஒரு அரசிளங்குமர அதிகாரி நியமிக்கப்பட்டார். அன்னார் புகழ் பெற்ற சைவ அடியார் கண்டராதித்தனார் பேரனார் ஆவார். உத்தமசோழனின் மகனாரும் ஆவார். அன்னார் இறையன்பு பூண்டு கையாடல் குற்றங்களைக் கடிந்து ஆலய நிர்வாகங் களை ஒழுங்குபடுத்தினார்.

சோழப் பேரரசில் முதல் குலோத்துங்கன் வழிமரபில் வந்த பல மன்னர் மன்னர்கள் சமய நிலையங்களை மிக ஆர் வத்துடன் போற்றிவந்தனர் என்பது உலகம் அறிந்ததே. அன்னார்கள் தாம் சோழ நாட்டுப் பெருங் கோயில்களை மிகச் சிறந்த முறையில் எழுப்பினார்கள். இரண்டு நூற்றாண்டு களில் கோயில்கள் பன்மடங்கு பெருகின. கணக்கற்ற தானங்கள் செய்யப்பட்டன. நிர்வாகப் பொறுப்பும் முன் ஏறிற்று. ஆகவே கையாடலும் ஏற்படுவது இயல்பு அல்லவா ? மூன்றாம் குலோத்துங்கன் (1178—1218) காலத் தில் கணக்கற்ற கோயில்களின் ஆட்சி பெருகவே கையாட லும் குறைக்க வழிகோலப்பட்டது. மழையின்மையினால் பஞ்சமும் அதனால் குழப்பமும் தோன்றிற்று. குகையிடி கலகம் என்ற பெயரில் மடங்களுள் மாச்சரியமும் கலகங் களும் தோன்றின. அதிகாரிகளுள் உடன்படிக்கை ஏற்பட் டும் அதனை மீறின செய்தியும் கலகம் நேரிட்டதும் காண் கிறோம். இந்த வகையில் கையாடலும் அதனை அடக்குதலும் ஏற்பட்டன.

மூன்றாம் குலோத்துங்கன் மகன் மூன்றாம் இராச ராசன் (1216—1256) காலத்தில் சோழர் பேரரசு மிகவும் அழிவுற்றது. போர்களும் கலகங்களும் மிகுந்தன. அரசனால் அவைகளை அடக்கமுடியவில்லை. அவன் சிறந்த வீரனாக இருந்தும் பயனில்லை. குறுநில மன்னர்கள் கலகங்களை விளைவித்தனர். நாட்டில் இராசத்துரோகம், சிவத்துரோகம், நாட்டுத்துரோகம் இவைகள் தாண்டவம் ஆடின. கி. பி. 1224—ல் அப்படிப்பட்ட துரோகிகள் விசாரிக்கப்பட்டுத்

தண்டிக்கப்பட்டார்கள். அதன் காரணமாக அந்தத் துரோகிகளின் நிலங்களும் பறிமுதல் செய்யப்பட்டு ஏலத்தில் விடப்பட்டன. அவ்வாறு துரோகங்கள் மிகுந்த இடங்கள் சீர்காழி, வலிவலம், திருவெண்காடு, மாகாளம், சிவபுரம் முதலிய பாடல்பெற்ற தலங்கள். ஆகவே மக்களுக்குச் சமயஅன்பு குறைந்துவிட்டது என ஊகிக்கவேண்டும். அடுத்து ஆண்ட 3-ம் இராசேந்திரச் சோழன் (1246—79) காலத்தில்சோழப் பேரரசே அழிந்துவிட்டது. இது ஒரு வியப்பு அல்ல.

விஜயாலயச் சோழர் பரம்பரையில் மற்ருெரு சிறந்த எடுத்துக்காட்டைக் கூறலாம். அதற்குக் கல்வெட்டுச் சான்ருேடு கருண பரம்பரையும் உள்ளது. அந்த மரபில் மிகப் புகழ்பெற்று விளங்கிய இராஜேந்திரசோழன் என்ற கங்கை கொண்ட சோழன் வடநாட்டின்மீது படையெடுத்துக் கங்கை வரைக்கும் சென்று தான் செய்த 'கங்கா விஜய'த்தை நிலைநிறுத்தக் 'கங்கை கொண்ட சோழபுரம்' என்ற ஒரு நகரத்தையும் வானளாவிய திருக்கோயிலையும் எழுப்பியதையும் நாம் அறிவோம். அந்தப் பெரிய கோயிலில் கடவுள் மங்கலம் செய்தானவுடன் அவன் தன் அமைச்சனை அழைத்து அக்கோயில் கட்ட எத்தனை செலவு ஆகியிருக்கிறது என்று அறிய விரும்பினுன். அக்கோயிலுக்குப் பொறுப்பாக இருந்த அமைச்சனே ஒழுங்கான முறையில் கணக்கு வைத்திருக்கவில்லை. ஆனுல் அவன் கள்ளங் கபடில்லாத பேரன்பன். கோயிலினுடைய பெருமையைப் பற்றியும், அதில் பெறக்கூடிய சீரிய சிற்பத்தைப் பற்றியுமே அவன் எண்ணினுனன்றிச் செலவான கணக்குகளைப் பற்றிச் சிந்திக்கவே இல்லை. அரசன் திடீரென்று கணக்கு கேட்டதும் அமைச்சன் மிகவும் கவலைகொண்டு மணிவாசகப் பெருமான் போன்று இறைவனிடம் தன் நிலைமையை முறையிட்டான். மறுநாள் மூத்த பிள்ளையார் ஒரு கணக்கன் திருவுருவில் வந்து இசாசேந்திர சோழன் முன்னிலையில் கணக்கு ஏடுகளைக் கொண்டுவந்து வைத்தான். அரசனே ஏடுகளைக் கண்டதும் அவைகளை முறையே வாசிக்கச் சொன்னுன். கணக்குப் பிள்ளை ஏட்டைத் திறந்து "எத்து நூல் எண்பது லட்சம்" என்று படித்துவிட்டு அரசனுடைய முகத்தைப் பார்த்தான். அரசனுக்கு அது முதலில்

விளங்கவில்லை. சிறிது நேரம் சிந்தித்தான். பிறகு, போதும் நீ எடுகளை எடுத்துக்கொண்டு போகலாம்" என்று சொன்ஞன். இது என்ன வியப்பு! அரசன் இந்த ஒரு குறிப்பினல் எவ்வாறு ஆறுதல் அடைந்தான்? இதைப்பற்றி ஒரு கர்ண பரம்பரை விளக்கம் உண்டு.

நமது நாட்டில் திருமணமோ அல்லது வேறு நற் செயலோ செய்யும்போது அதற்காகக் கணக்கும் எழுது வது உண்டு. அப்போது பிள்ளையார் சுழி இட்டதுடன் 'மஞ்சள் குங்குமம் ஒரு அணு' என்று எழுதுவது உண்டு. இதைப்போல கோயில் கட்டும்போது முதலில் "எத்து நூல்" என்ற கணக்கு எழுதுவது உண்டு. அதாவது 'கருங் கல் பணிக்கு எத்தனை நூல் அளவு பிடித்தது' என்பதைக் குறிப்பதாகும். கருங்கல்லைச் செதுக்குவதற்கு முந்தி அது அளக்க நூல் அளவு எழுதுவது வழக்கம். கங்கை கொண்ட சோழபுரத்துக் கோயிலுக்கு அப்படிப்பட்ட நூல் எண்பது லட்சம் பிடித்தது என்ற கணக்கைக் கேட்டதே. அதனைப் பற்றிய கணக்கு முழுவதும் கேட்கவேண்டிய தேவை இல்லை என்று அரசன் எண்ணிவிட்டான். அதனலேயே, அவன் வேறு பரிசோதனை செய்யவில்லை.

தற்போதும் இந்த வகையில் கணக்கைப் படித்த விநாயகருக்கு சிறிது தூரத்தில் ஒரு கோயில் ஏற்பட்டுள் ளது. அந்தக் கோயில் பிள்ளையாருக்கு "கணக்க விநாய கர்" என்ற பெயர் தற்போதும் வழங்குகிறது.

இந்த வரலாற்றினல் நாம் அறியக்கூடியது என்ன வெனில் தற்காலத்தைப்போலவே சோழர்கள் காலத்திலும் கோயில் முதலிய திருப்பணிகளிலும்கூடக் கணக்கு வைத்துக் கொண்டு பரிசோதனையும் நடந்தது என்று அறியலாம். சில சமயங்களில் அதிகாரிகள் கையாடல் செய்வதும் உண்டு. அதைக் கண்டித்தும், தண்டித்தும் ஒழுக்கமுறை தேடினர் கள். இங்கே குறித்த செய்தி வெறும் கற்பனைக் கதை என்று தள்ளிவிடலாகாது. கங்கைகொண்ட சோழபுரத்துப் பெரியாவுடையார் கோயிலில் கீழைக்கோபுர வாசலுக்குத் தென்புறம் ஒரு கற்றூணிலே "எத்துநூல் எண்பது லட்சம்" என்று பொறிக்கப்பட்டுள்ளதைத் தென் இந்தியக் கோயில் சாசனங்கள்—இரண்டாவது பகுதி எடுத்துக் கூறுகின்றது.

ஆகவே, தற்காலங்களில் நமது திருக்கோயில்களில் நடைபெறும் திருப்பணிகளோ அல்லது திருவிழாக்களோ ஒழுங்காக நடைபெறும் பொருட்டு அரசியலார் அதிகாரிகளை நியமிப்பது குறை என்று எண்ணக்கூடாது. உலகில் சமய அன்பில் மிகச் சிறந்த சோழ அரசர்கள் காலத்திலேயே கையாடல் நிகழ்ந்திருக்கும்போது கடவுள் அன்பு குறைந்து வரும் இந்நாளில் அதனைத் தவிர்க்க ஏற்படுத்தும் விதிகள் மிகத் தேவை என்று அறியலாம்.

மற்ற சமய நிலையங்களிலும், சிறப்பாக உண்மையே தங்களுக்கு உரிமை என்று கூறிக்கொள்ளும் சில சமயத்தார்களிலும் இக்காலங்களில் கையாடல்கள் அடிக்கடி நடந்து வருகின்றன. ஆகவே, நமது ஆலயங்களில் தூய்மை, அன்பு முதலியவைகள் ஓங்கவேண்டும் என்று எண்ணும் போது கையாடல் என்ற சொல்லையே நமது அகராதியிலிருந்து தொலைக்க வேண்டியது நமது கடமை யல்லவா ?

---

# திருமுருகாற்றுப்படை சைவசித்தாந்த விளக்கமே

வித்துவான் - செ. வேங்கடராமச் செட்டியார்

(மலர்-30 ; இதழ் - 5 ; 160-ம் பக்கத் தொடர்ச்சி)

அப்பெருமானுடைய அறுமுகங்களுக்குமேல் ஆறு மணி முடிகள் காணப்படுகின்றன. ஒவ்வொரு முடியும், தாமம், முகுடம், பதுமம், கிம்புரி, கோடகம் என்ற ஐந்துறுப்புக்களை யுடையதாகக் காணப்படுகின்றது. அம்முடிகளில் பதிக்கப்பெற்ற, ஒன்றோடொன்று ஒவ்வாத பலநிற மணிகள், மின்னலைப் போன்ற ஒளியுடன் சென்னியில் பொலிந்து தோன்றுகின்றன. ஒவ்வொரு முகத்தினும் இருபுறத்தும் அமைந்த காதுகளில் ஒளியுடன் அசைகின்ற வேலைப்பாடு அமைந்த பொன்னாலியன்ற மகரகுண்டலங்கள் காணப்படுகின்றன. ஒளிவாய்ந்த முருகப் பெருமான் முகங்களின் இருமருங்கும் அக்குண்டலங்கள் தொங்கியசையும் தோற்றம், விண்ணின் விளங்கும் வெண்டிங்களை யகலாது சூழ்ந்துள்ள விண்மின்களைப்போல ஒளிசெய்கின்றன.

குற்றமில்லாத கொள்கையுடையராய்த் தவமாகிய தந் தொழிலைச் செய்து முடிப்பவருடைய நெஞ்சிலே இந்த ஆறுமுகங்களும் பொருந்தித் தோன்றும் இயல்பையுடையனவாம்.

அவற்றுள் ஒருமுகம், மிக்க இருளையுடைய உலகம் குற்றமில்லாமல் விளங்கும்படிப் பல கிரணங்களையும் தோற்றுவித்தது. அம்முகத்திற் கேற்ற கையிரண்டில் ஒருகை, ஞாயிற்றின் வெம்மை உயிர்களை வருத்தாதபடி தாங்கி விண்ணில் திரிகின்ற வேணுவிகட்குப் பாதுகாவலாக ஏந்திய நிலையிலுள்ளது. மற்றொருகை மருங்கில் வைக்கப் பட்டுள்ளது.

இரண்டாவது முகம், தன்பால் அன்பு செய்பவர்கள் துதிக்க அதற்குப் பொருந்தி அவர்க்கு இனிமையாக நடந்து அவர் மேற்சென்ற அன்பினால் மகிழ்ந்து அவர் வேண்டும் வரங்களைக் கொடுக்கும் இயல்பினது. அம்முகத் திற்கேற்ற கையிரண்டில் ஒருகை, அங்குசத்தைக்கொண்டு யானையைச் செலுத்துகின்றது. மற்றொருகை, செந்நிற ஆடையணிந்த துடையின்மேல் கிடக்கின்றது. தன்னை அன்பால் நினைவார்பால் அவர் நினைந்தவுடன் யானைமேல் விரைந்து செல்லுதல் இயல்பாதலின் வரங்கொடுக்கும் முகத்திற்குரிய கை அங்குசம் தாங்கியுள்ளது.

மூன்றாவது முகம், மந்திரத்தையுடைய வேத விதிவழுவாத அந்தணர் செய்யும் வேள்வியில் தீங்கு நிகழாதபடி நினைக்கும் இயல்பினது. அம்முகத்திற்குரிய கையிரண்டும் வேலும் கேடகமும் ஏந்தி அசுரர் வந்து வேள்வியைக்கெடுக் காமல் காப்பாற்றவேண்டி வலமாகச் சுழற்றுகின்றன.

நான்காவது முகம், இவ்வுலகத்து வழங்காத வேதங் களிலும் நூல்களிலுமுள்ள பொருள்களை முனிவர்கள் ஏம முறும்படி ஆராய்ந்து சந்திரனைப் போலத் திக்குகளை யெல் லாம் விளக்கும் இயல்பினது. அம்முகத்திற்குரிய இருகை களில் ஒருகை, முனிவர்க்குத் தத்துவங் கடந்த பொருளைச் சொல்லாமல் சொல்லுதற்கு ஞானமுத்திரையைக் காட்டிய வண்ணம் மார்பொடு விளங்குகின்றது. மற்றொருகை, தாழ்ந்துள்ள மார்பின் மாலையோடு சேர்ந்து அழகுற விளங்குகின்றது. இறைவன், மோனமாய் ஞான முத்தி ரையைக் காட்டியவண்ணம் தானேயாக இருந்து பரம்

பொருளிது வென்று காட்டித்தர மாணக்கர்கட்கு ஆனந்த மயமான ஒளி தானே நிறையும்.

ஐந்தாவது முகம், சென்ற போரில் வெகுண்டு வந்த பகைவர்களைத் தேய்த்து அழித்துக் கறுவுதல் கொண்ட மனத்தோடு களவேள்வி செய்தது. அம்முகத்திற்கேற்ற கையிரண்டில் ஒருகை கீழ்வீழ்கின்ற வீரவளையோடு மேலே சுழன்று களவேள்விக்கு முத்திரை கொடுக்கும் இயல்பினது. மற்றொருகை, மணியை அசைத்து ஒலிக்கப் பண்ணு மியல்பினது.

ஆறுவது முகம், குறவருடைய இளமையுடைய மக ளாகிய கொடியைப் போலும் இடையுடைய மடப்பம் பொருந்திய வள்ளியம்மையாரோடு நகைத்தலை விரும்பும் இயல்பினது. காமநுகர்ச்சியில்லாத கடவுள், உலகில் இல் வாழ்க்கை நிகழ்தற்காகவே இவ்வாறு நகை செய்கின்றான் என்க. அம்முகத்திற்கேற்ற கையிரண்டில் ஒருகை, நீல நிறத்தையுடைய மேகத்தாலே மிக்க மழையைப் பெய்கின் றது. மற்றொருகை, தேவ உலகத்து வாழ்கின்ற தேவ மங்கையர்க்கு மணமாலையைச் சூட்டுகின்றது. உலகில் நிகழ்த்தப்படும் இல்வாழ்க்கை இனிது நடத்தற்கு மழையும் மணமும் இன்றியமையாமையின் இவைகளை அக்கையிரண் டும் செய்கின்றன. முத்துமாலை தொங்கும் அழகிய மார் பிலே கிடக்கின்ற மூன்று வரிகள் அழகின் உயர்வைக் காட்டிக்கொண்டிருக்கின்றன.

இவ்வாறு அவ்வாறு முகங்களும் செய்யவேண்டிய முறைகளைப் பழகி நடத்துகின்றன. அவற்றிற் கேற்பப் பன்னிரண்டு கைகளும் உரிய தொழில்களைச் செய்கின்றன. விண்ணில் தேவ துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்கு கின்றன. ஊது கொம்புகள் ஒலிக்கின்றன. சங்குகள் முழங்குகின்றன. இடிபோன்ற முரசுகள் முழங்குகின் றன. பல புள்ளிகளையுடைய மயில முருகன் ஆணையால் வெற்றிக்கொடியிலிருந்து அகவுகின்றது. இவை இங்ஙனம் நிகழ விண்வழியாக விரைந்து செல்லுதலை மேற்கொண்டு நன்மக்களால் புகழப்பட்ட சிறந்த புகழினையுடைய திருச் சீரலைவாய் என்னும் பதியில் செல்ல எழுந்தருளுதலும் அம் முருகப் பெருமானுக்கு நிலைபெற்ற குணமாகும் (என்பது அதன்விரிவு.)

இப்பகுதி இறைவன் உலகமாய் விளங்கும் தன்மையை எவ்வாறு விளக்குகின்றது என்பதை நோக்குவோம். உருவமுடைய ஒருபொருள், நாற்றிசையும் மேலும் கீழும் ஆகிய இரண்டு பக்கமும் ஆக ஆறு பக்கங்களை யுடையதாதல் கண்கூடு. உலகம் வடிவமுடையது. அதற்கு மேற்கூறிய ஆறுபக்கங்கள் உண்டு. உலக முழுதும் நோக்கவேண்டுமாயின் இந்த ஆறு பக்கங்களையும் பார்க்க வேண்டும். உலகமாகவும் உலகத்தின் ஆறுபக்கங்களாகவும் இருப்பவன் யானே என்பது தோன்றவே இறைவன் ஆறுமுகமுடையனாக விளங்குகின்றான் என்பது ஆன்றோர் முடிபு. இம்முறையால் முருகப் பெருமான் ஐம்பூதங்களாலாய உலகமாய் விளங்குகின்றான் என்பது பெறப்படும்.

மேலும், அறுமுகமும் பன்னிருகையும் செய்யும் செயல்கள் யாவும் உலக நிகழ்ச்சி நன்கு நடைபெறச் செய்வனவாகவே விளங்குவதால் முருகன் கலப்பால் உலகமாய் விளங்குகின்றான் என்பது விளங்கும். பலகதிர் விரிந்தன்று ஒருமுகம் என்பதால் ஞாயிறாக ஒளி செய்கின்றான் என்பதும், திங்கள் போலத் திசைவிளக்கும்" என உவமைமுகத்தான் விளக்கி யிருத்தலால் அத்திங்களின் தன்மையனாக இருக்கின்றான் என்பதும் பெறப்படும். திங்களுக்குரிய ஒளி, ஞாயிற்றின் பால் பெற்றதே ஆதலின் ஞாயிறாக அவன் விளங்குகின்றான் என்றமையால் திங்களாகவும் இருக்கின்றான் என்பதைப் பெறவைத்தார் என்றலும் ஒன்று. எனவே முருகப்பெருமான் திங்களும் ஞாயிறுமாக இருக்கின்றான் என்பது பெறப்படும்.

இனி, உயிர்கள், இவ்வுலகத்து நுகர்தற்கு வேண்டியவற்றை வேண்டியாங்குப் பெற விரும்புவனவும் மறுமைக்கண் தேவராதற்பொருட்டு வேள்வி முதலியவற்றைச் செய்ய விரும்புவனவும் இந்த இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் பெற விரும்பினது ஞானம் ஒன்றையே நோக்குவனவும் என முத்திறத்தவாகக் கொள்ளலாம். இம்முத்திற உயிர்கட்கும் முருகன், வரங்கொடுக்கும் முகத்தானும் நகையமர்ந்த முகத்தானும் களம்வேட்ட முகத்தானும் வேண்டிய பொருள்களை யளித்தும் இன்புறுத்தியும் இம்மைப் பயனை அளிக்கின்றான். வேள்வியோர்க்கும் முகத்தால் மறுமைப் பயனை அளிக்கின்றான். திங்கள் போலத்

திசைவிளக்கும் முகத்தால் ஞானத்தை யளிக்கின்றான்; வீடுபேற்றின் பொருட்டு, உயிர்கள் இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் வீட்டின்பத்தையும் எய்தும்பொருட்டு முருகப் பெருமான் நகையமர்தல் முதலிய செய்து இன்ப முதலியவற்றை யுறுகின்றான் என்பது இங்குப் பெறப்படு கின்றது. படவே, முருகன் கலப்பால் உயிர்கள் ஆகின் றான் என்பது போதரும். இதனால் ஐம்பூதங்களானியன்ற உலகமாகவும் திங்களாகவும் ஞாயிறாகவும் இயமானனாகவும் விளங்கி, முருகப்பெருமான் உலகமே யாகின்றான் என்பது தெளிவாம். பரங்குன்றத்தை நோக்கத் திருச்சீரலைவாய் தாழ்ந்த இடத்தின்கண் இருத்தலும் பரங்குன்றத்தில் தத்து வங் கடந்து தானேயாய் நிற்கும் இறைவன், தன் சிறப் பியல்பிலிருந்து இறங்கி உலகமாய் நிற்கும் பொதுவியல் பிற்கு வந்ததாகக் கூறுதலும் எத்துணைப் பொருத்தமாகக் காணப்படுகின்றது காண்மின்.

திருச்சீரலைவாய் என்றது திருச்செந்தூரை. முருகன் திருக்கோயில் கடல் அலைகள் மோதும் இடத்தில் அமைந் திருத்தலின் இப்பெயர் வந்தது. "வெண்டலைப் புணரி அலைக் கும் செந்தில் நெடுவேள் நிலைஇய காமர் வியன் றுறை" எனப் புறப்பாட்டு இப்பெயர்க் காரணத்தை விளக்குதல் காண்க.

## 10. திருவாவிநன்குடி

இப்பகுதியில் முருகப்பெருமான் உயிர்க்குயிராதல் தன்மையால் உலகமோடுடனாய் நிற்கும் உடனிலையை யுணர்த்துகின்றார் புலவர். திருமால் முதலிய தேவர்கள் பிரமன் பொருட்டு வந்து தன்னைக் காண வள்ளியம்மையா ரோடு ஆவிநன்குடியில் உறைதலும் உரியன் முருகன் என்பது இங்குக் கூறப்படும் பொருள்.

முருகப்பெருமான் கயிலையில் வீற்றிருக்கும்பொழுது பிரமன் சிவதரிசனத்திற்கு வந்தானாக, அப்பொழுது தன்னை நன்கு மதியாது அவன் செல்ல அவன் செருக்கடக்க வேண்டி முருகப் பெருமான், அவனை அருகழைத்துப் பிர ணவப் பொருள் கேட்க அது கூற வியலாது பிரமன் திகைப்ப அவன் தலையில் குட்டிச் சிறையிட்டான். அவ னைச் சிறை மீட்பதற்காகவே திருமால் முதலிய தேவர்கள்

முருகப் பெருமானை வணங்கிவேண்டிக்கொள்ளத் திருவாவி நன்குடிக்குச் செல்கின்றார்கள். (நச்சினார்க்கினியர் வேறு கதை கூறுவர்) தேவர்கட்கு முன்னாக முனிவர் புகுகின்றனர். அமைதியான தோற்றமுடைய இம்முனிவர்களைக் கண்டால் முருகன் மறுது ஏற்றுக்கொள்வானன்றோ? இம் முனிவரைக் கண்ட அமைதித் தன்மையால் பின்வருபவர்களையும் மறுக்காமல் ஏற்றுக்கொள்வான் என்னும் கருத்தால் இவர்கள் முன்னே புகுகின்றார்கள். இம்முனிவர் இயல்பைப் படம்பிடித்துக் காட்டுவதுபோல் அழகாகக் காட்டுகின்றார் புலவர்.

முனிவர்: மரவுரியை உடையாக உடுத்துள்ளனர். வடிவாலும் நிறத்தாலும் வலம்புரிச் சங்கினையொத்த நரை முடி யுடையவராக விளங்குகின்றனர். எக்காலத்தும் நீராடுதலால் அழுக்கில்லாமல் விளங்குகின்றது அவர்களுடம்பு. அவர்கள் மார்பு மான்தோலால் போர்க்கப்பட்டுளது. விரதங்களால் தசை சுருங்கியிருப்பதால் அம்மார்பில் எலும்புகள் எழுந்து கோவையாகத் தோன்றி அசைகின்றன. நல்ல நாள்கள் பலவற்றுள் உணவின்றிக் கழித்த நோன்பினையுடையவர்கள். அவர்கள் மனத்தில் மாறுபாடுமில்லை; செற்றமுமில்லை. அவர்கள் இயற்கையறிவு, எல்லாவற்றையும் கற்றவராலும் அறியவியலாத பெருமையது. கற்றவர்க்கெல்லாம் தாம் எல்லையாக நிற்கும் தலைமையுடையவர்கள். அவ்வறிவின் திறத்தால் காமத்தையும் கடுஞ்சினத்தையும் அறவே நீக்கினவர்கள். தவத்தின் கடுமையால் மெய்வருத்தம் காணப்படினும் மனத்தினால் வருத்தம் சிறிதும் அறியப்படாத இயல்பினர். யாரிடத்தும் வெறுப்பில்லாத நல்லறிவினையுடையவர்கள். இத்தகைய முனிவர்கள் முருகன்பால் முன்னே புகுகின்றனர்.

நீர் பலகால் மூழ்குதலால் அழுக்கடையாப் புறத்தூய்மையும் காமவெகுளி மயக்கமாகிய முக்குற்றமும் முறையினீங்கிய அகத்தூய்மையும் உடைய முனிவர் குழாத்தைக் கண்டால் முருகப்பெருமான் பிரமன்பால் கொண்ட செற்றங் குறைவது இயல்பன்றோ? இம்முனிவர் குழாத்தைக் கண்ட பின்னரும் வெகுளி சிறிது உளதாயின் அதையும் தணிக்கும் பொருட்டு இன்னும் ஒரு குழாம் வருகின்றது. அது கந்தருவர் குழாம்; ஆணும் பெண்ணும் கலந்த குழாம்

அது. அக்குழாத்தில் உள்ளவர்கள் எத்தகையினர் என்பதை நோக்குவோம்.

கந்தருவர் : கந்தருவர்கள், புகையை முகந்துகொண்டாற் போன்ற அழுக்கில்லாத் தூய மெல்லிய உடையணிந்துள்ளார்கள். அவர்கள் மார்பில் அரும்பு சிறிதலர்ந்த மலர் மாலை கிடந்து அசைகின்றது. செவியாலே சுருதியை அளந்து கட்டின சுற்றுதல் பொருந்திய வார்க்கட்டினையுடைய நல்ல யாழிசையிலே பயின்ற அன்புடைய நெஞ்சினுலே எக்காலத்தும் மெல்லிய மொழிகளையே சொல்லுதலில் விருப்பமுள்ளவர்கள். இத்தகையவர்கள் இனிய யாழ் வாசிக்கின்ருர்கள். இவர்கள் ஆடவர்கள். இவர்களோடு பெண்டிரும் வருகின்றனர். அவர்கள், மக்களுக்கு வரும் நோயே இல்லாமல் இயன்றுள்ள உடம்பையுடையவர்கள். அவர்கள் மேனி மாந்தளிர் போன்று விளங்குகின்றது. அந்த மேனியில் தேமல் ஒளி வீசுகின்றது. அது ஒளி வீசுந்தோறும் பொன்னைத் தேய்த்தாற்போல் விளங்குகின்றது. அவர்கள் இடைகளில் பருமம் என்னும் மணிஅணியை அணிந்துள்ளார்கள். அது கண்ணுக்கினிய ஒளியுடையதாய்ப் பதினெண் கோவையுடையதாகக் காணப்படுகின்றது. இத்தகைய குற்றமற்ற அவ்வாடவர் அருகே பாடிக்கொண்டு வருகின்ருர்கள்.

முன்வந்த முனிவர் குழாத்தில் துறவு நிலையைப் பார்க்கின்ருேம். இக் கந்தருவர் குழாத்தில் இல்லறநிலையைப் பார்க்கின்ருேம். முனிவர் யாவரும் ஆடவர்களே. கந்தருவர் குழாத்தில் மைந்தரும் மகளிரும் கலந்து காட்சியளிக்கின்றனர். முனிவர் குழாத்தில் நரை முடியும் ஒட்டிய வயிறும் எலும்பு தோன்றும் மார்பும் காணப்படுகின்றன. கந்தருவர் குழாத்தில் மாந்தளிர் போன்ற மேனியையும் பொன்போன்ற தேமலையும் நோயின்றியன்ற நல்லுடம்பையும் காண்கின்ருேம். முனிவர் உடுத்திருப்பது மரவுரி; கந்தருவர் உடையோ புகை முகந்தாற்போன்ற தூய மெல்லிய அழகிய ஆடையாகும். முனிவர் குழாத்தில் அமைதி நிலவுகின்றது; கந்தருவர் குழாத்தில் யாழொலியும் இன்குரற்பாடலும் இனிதாக எழுகின்றன. இக்குழாத்தில் உடம்பின் தோற்றத்தாலும் மொழிவழித்தோன்றும் இன்னிசையாலும் கண்ணுக்கும் செவிக்கும் நுகர்ச்சியுண்டு.

ஆனல் முனிவர் குழாத்திலோ கண்ணுக்கினிய காட்சியுமில்லை; காதுக்கினிய கேள்வியுமில்லை. அவர் புறத் தோற்றம் விரும்பிக் காணத்தக்க கவினுடையதாகவில்லை. அம் முனிவர் அகத்தோற்றமோ மிகமிகச் சிறந்து விளங்குகின்றது! கந்தருவர் குழாத்தின் அத் தோற்றத்தைப் பற்றி யாதும் உணரவியலவில்லை; உடம்பின் புறத் தோற்றமும் மென்மொழியுமே காணவும் கேட்கவும் இயலுகின்றது. முனிவர் குழாத்திலுள்ள உள்ளொளி, உணர்ந்தோர் உள்ளங்களில் இருளைப் போக்கி ஒளியுண்டாக்கும் தன்மையதாகக் காணப்படுகின்றது. மெய்யும் மொழியும் மனத்தின் வழியவே ஆதலின் மெய்யழகைவிட மொழி இனிமையைவிட மனத்தழகே சிறந்தது என்பது கூறவும் வேண்டுமோ? அம்முனிவர் உள்ளத்தில் காமவெகுளி மயக்கங்கட்குஇடமேயில்லை. நூலறிவாகிய அபரஞானத்தாலும் அநுபவவுணர்வாகிய பரஞானத்தாலும் அவர்கள் உள்ளம் ஒளிமயமாய்த் திகழ்கின்றது.ஓவியராலும் வரைந்துகாட்டவியலாதமுனிவர் உள்ளொளியை நன்கு விளக்கிக் காட்டுகின்ருர் புலவர்.

தேவர்: முனிவர்கள் உள்ளொளியால் அமைதியையுண்டாக்கிக் கொண்டு முன் புகுந்ததாலும், கந்தருவர் இன்னிசையால் அமைதியை யுண்டாக்கிக் கொண்டு பின் புகுந்ததாலும், முருகப் பெருமான் நல்ல செவ்வியனைக் இருப்பான் என்று துணிந்து மாமனாகிய திருமால் வருகின்ருன்.மாமனைக் கண்டால் மருகனாகிய முருகனுக்கு அன்பே மிகுதல் இயல்பன்ருே? மேலும் பிரமன், தன்மகனாதலின் அவன் துயர் நீக்கும் உரிமையும் விரைவும் தோன்ற முன்னர் வருகின்ருன் திருமால். யாவரும் அஞ்சத்தக்க நஞ்சுடைய பாம்பு வலி அழியும்படி அழிக்கின்ற கருடக் கொடியை யுடையவனாய் அத்திருமால் புகுகின்ருன்; சேய்மையில் வரும்பொழுதே கொடியைக் கொண்டு தன் வருகையை யுணரவேண்டி அவற்றுக்குப் பின் வெள்ளேற்றுக் கொடி தோன்றுகின்றது. அக்கொடி, மங்கை பங்கனாகிய முக்கண்ணனுடையது. அக்கொடியுடன் திரிபுரமெரிசெய்த விரிசடைக் கடவுள் தோன்றுகின்ருன். "தாய் தந்தையை மதித்து அவர் விரும்பியதைச் செய்வது மகன் கடமை" என்பதை யுணர்ந்து முருகன் பிரமனைச் சிறைவிடுப்பான் என்று அம்மங்கை பங்கன் வருதல் முறைதானே!

அவற்குப்பின் ஐராவதம் என்னும் யானைமேல் கண்ணுயிரங்கொண்ட விண்ணுடர் கோமான் வருகின்றான். அவன் நூறு பரி வேள்விகளைச் செய்தவன்; பகைவர்களை வென்று கொண்ட வெற்றியை யுடையவன். அவனேறிய யானை நான்கு கொம்புகளையுடையது; அழகிய நடையது. நிலத்தே தாழ்ந்த பெரிய துதிக்கையை யுடையது. முருகனுக்குத் தெய்வயானையை யீன்றளித்து மாமன் என்னும் உரிமைபெற்ற இந்திரன் அவ்யானைமேல் பெருமையும் உரிமையும் தோன்ற வருதல் பொருத்தமேயன்றோ?

நல்ல நகரங்கள் நிலைபெற்ற உலகத்தைக் காக்கும் ஒரு நோக்கத்தையே விரும்பி மேற்கொண்டுள்ள அரன், அரி, அயன், இந்திரன் ஆகிய நான்கு பெருந் தெய்வங்களுள் தாமரையில் பிறந்தவனும் அழிவில்லாத ஆயுளையுடையவனும் ஆய நான்முகனாகிய ஒருவனைச் சிறையினின்றும் விடுதலை செய்யவேண்டிப் பலராலும் புகழப்படுகின்ற மேற்சொன்ன ஏனை மூவரும் தேவர் குழாத்திற்குத் தலைவர்களாக வரப் பகல்போல் விளங்கும் மாறுபடாத நல்லறிவினையுடைய வசுக்கள், மருத்துவர், ஆதித்தர், உருத்திரர் என்னும் உயர்நிலைபெற்ற முப்பத்து மூவரோடும் பதினெண் வகைப்பட்ட தேவகணங்கள், விண்மீன்கள் பூத்தாற் போன்ற தோற்றமுடையராயும், அம்மீன்களைச் சேர்ந்து காற்று எழுந்தாற்போன்ற விரைந்த நடையினை யுடையராயும், காற்றுக்கிடையில் தீயெழுந்தாற்போன்ற வலிமை யுடையவர்களாயும், தீயுண்டாகுமாறு இடியிடித்தாற் போன்ற குரலினையுடையவர்களாயும், தாம் அடைந்துள்ள குறை தீர்க்கப்படவேண்டிய முறையிலே விண்வழியாக இன்பமிக்க மண்ணுலகிலே வந்து தோன்றி ஒருசேரக் காண்கின்றார்கள். முருகப்பெருமான் இவ்வாறு அத்தேவர்கள் வந்து காணுமாறு வருத்தமில்லாத அருட்கற்பினையுடைய வள்ளியுடன் சிலநாள் ஆவிநன்குடியென்னும் ஊரில் இருத்தலுமுரியன்.

முன்னே முனிவர் குழாம் செல்லப் பின்னர்க் கந்தருவர் குழாம் செல்ல, அவர்க்குப் பின்னே அரி, அரன், இந்திரன் என்ற மூவரைத் தலைவராகக் கொண்ட தேவகணம் புகுந்து முருகன்பால் தங்குறையைத் தெரிவிக்கச் சென்று காண்கின்றது. இங்ஙனம் தேவர்கள் தரிசிக்க வள்ளி

யம்மையாரோடு முருகன், ஆவினன்குடியில் சிலநாள் தங்கி யிருப்பான் என்று புலவர் கூறுகின்றார்.

திருச்சீரலைவாயில் அறுமுகமுடைய முருகன் திருவுருவத்தைக் கூறினாரன்றித் தேவியாரைக் கூறவில்லை. ஆவினன் குடியில் அம்முருகன் தேவியொடு வீற்றிருக்கும் நிலையை விளம்புகின்றார். இந்நிலையே இறைவன், உயிர்க்குயிராதல் தன்மையால், உலகமோடுடனாதலாகிய நிலையாகும். "சர்வம் சத்திமயம் சகத்து" என்பது வேதவாக்கியம். இதனை, "அனைத்தும் தன்மயமெனும் சுருதி கரியாவைத்தும்" என்னும் (முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்-12) ஓதாதுணர்ந்த குமரகுருபரருடைய திருவாக்கானுணரலாம். உலகமாய் விளங்கும் சத்திக்கு உயிராய் அச்சத்தியுடன் வீற்றிருப்பதே உயிர்க்குயிராய் நிற்கும் உடனாதல் தன்மையை நன்கு விளக்குதல் காண்க.

மேலும், உயிர்கள்தம் மலநோய் நீங்க இறைவன் திருக்கூத்தைக் காணவேண்டியிருக்க அவ்வுயிர்களின் சார்பாகச் சத்தியே அக்கூத்தைக் காண்கின்றாள் என்பதை :

"பாலுண் குழவிப் பசுங்குடர் பொறாதென
நோயுண் மருந்து தாயுண் டாங்கு
மன்னுயிர்த் தொகுதிக் கின்னருள் கிடைப்ப
வையமீன் றளித்த தெய்வக் கற்பின்
அருள்சூல் கொண்ட வையரித் தடங்கண்
திருமாண் சாயல் திருந்திழை காணச்
சிற்சபை பொலியத் திருநடம் புரியும்"

(சிதம்பர மும்மணிக்கோவை-1)

என்று குமரகுருபரர் கூறியிருத்தல் காண்க. இதனால் சத்தியே உயிர்கட்குப் பிரதிநிதியாதல் விளங்கும். உலகுயிர்க்கெல்லாம் முருகன் உயிராயிருத்தலை அவ்வுயிர்கட்குப் பிரதிநிதியாக விளங்கும் சத்தியின் உயிர்க்குயிராய் உடனிருந்து காட்டுவதே சாலப் பொருத்தமாதல் காண்க. அச்சத்தி தானும் மண்ணுலக மாதாகிய வள்ளியம்மையாராதல் எவ்வளவு பொருத்தம் என்பதை அறிக. இங்ஙனமன்றி உடனாதல் தன்மையை விளக்க ஒண்ணாமையை நுனித்துணர்க. "பழநியுள் குமர குறத்தைக்குப் பாங்காம் பெருமாளே" (585) என்ற அருணகிரியார் வாக்கால்

ஈண்டு 'மடந்தை' என்றது வள்ளியையே என்பதுணரலாம். மேலும்; நக்கீரரும், ஒருமுகம், "மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்று" என வள்ளியோடு மகிழ்தலையே சிறப்பாகக் கூறியிருத்தல் காண்க.

திருப்பரங் குன்றத்தில் உலகிற்கு வேருய்த் தனித்திருக்கும் பரநிலையினையும், திருச்சீரலைவாயில் கலப்பால் உலகமேயாய பருநிலையினையும், திருவாவினன்குடியில் உயிர்க்குயிராதல் தன்மையால் உடனும் நிலையினையும் முறையாக விளக்கினர் சீவன் முத்தராம் பெரும்புலவர். இங்ஙனம் புண்ணியத் தலங்களொடு பொருத்தி இறைவனுடைய மூவகை இலக்கணங்களை யுணர்த்தாக்கால் வீடு விரும்பிய புலவர் இறைவனை யுள்ளவாறுணர்தலும் அவன் திருவடிப் பேற்றைப் பெறுதலும் கூடாமை யுணர்க. இறைவனுடைய இம்மூவகை நிலைகளையுணர்ந்த புலவர், இறைவனை இம் மூவகை நிலையில் வைத்து வழிபடுவோர் இவர் என்பதையும், அவர் வழிபடு முறை இவ்வாறு என்பதையும் நன்கு உணர்ந்தாலன்றித் தாம் வழிபாடு செய்து பயன் எய்தல் இயலாது ஆதலின், அம்மூவகை நிலையில் வைத்து வழிபடுவோர் நிலைகளை, திருவேரகம், குன்றுதோருடல், பழமுதிர் சோலைமலை என்ற முப்பதியில் வைத்து முறையே விளக்குகின்ருர். (தொடரும்)

---

# ஞானச் செய்தி

K. இராமநாதன் செட்டியார்

ஏக இருட்டு : எங்கும் அடர்ந்த இருட்டு, ஏதோ கருத்த பொருள் நெருங்கிக் கிடந்தது போலிருக்கிறது. இந்த நள்ளிருள் நடுவே ஒரு பெரிய விருட்சம். மரத்தின் வேர் எங்கேயென்றும், நுனி எங்கேயென்றும், அகலம் எவ்வளவென்றும் சொல்ல முடியாத அளவு பெரியது. அம் மரம், கெட்ட நாற்றம் வீசும் பூக்கள், முள்மலிந்த இலைகள், முருடு நிறைந்த கிளைகள், விஷம்போன்ற பிசின் ஒழுகும்வாதுகள். அந்த விஷ விருட்சத்தில் கோடிக்கணக்கான உயிர்கள் அலைந்து திரிகின்றன. ஆனல் ஒன்றையொன்று பார்ப்பதில்லை. ஒன்றுடனென்று சேர்வதில்லை. இருள் ஒன்றினுக்கு ஒன்றை மறைக்கிறது. அவ்வுயிர்கள் எல்லாம்

பின்னிக்கிடக்கும் மரத்திடையே பயமின்றிச் சஞ்சரிக்கின்றன. பற்பல காலமாகச் சஞ்சரித்து வருகின்றன.

**அருள் வீழ்ச்சி** : ஒரு நாள் மறைந்து நின்ற ஒருவரிடமிருந்து ஒரு சுடரொளி ஊடுருவிச்சென்று ஒரு பெரிய கிளையின் மேல் விழுகிறது. அவ்வெளிச்சம் "டார்ச் லைட்" போல் ஒளியை நேராகப் பாயச் செய்கிறது. அக்கிளையில் ஒரு மனிதன் கஷ்டப்பட்டுக் கண் திறந்து பார்க்கிறான். ஒன்றுந்தோன்றவில்லை. அவ்வெளிச்சத்தையோ, வெளிச்சம் புறப்படும் இடத்தை நோக்கியோ, வெளிச்சம் செலுத்துபவனையோ பார்க்க முடியவில்லை. கண்ணைத் துடைத்துக் கொண்டு தன்னைச் சுற்றியும் பார்க்கிறான். திடுக்கிடுறான். வெறிக்கிறான். கலங்குகிறான். உடல் நடுங்குகிறது. ஏன்? அக்கிளையிலே பல உயிர்கள். அவைகள் இவனைக் காணவில்லையாயினும், இவன் அவைகளைக் காணுகிறான். அருகாமையிலே புலி, சிங்கம்; பக்கத்திலே படமெடுத்துத் தலைதூக்கி நிற்கும் பாம்பு. இன்னும் எண்ணிலாத கோர ரூபங்கள். மரத்திலிருந்து குதித்துவிடல் நன்றெனத் தோன்றுகிறது. ஆனால் விழும் இடம் எப்படி இருக்குமோ, எவ்வளவு தூரமோ என்ற எண்ணம் குதிப்பதைத் தடுக்கிறது. மனம் இவ்வாறு தள்ளாடும் சமயம் சுடரொளியும் மறைந்து விடுகிறது. ஆயினும் கண்ணால் கண்டகாட்சி கருத்தைவிட்டு அகலவில்லை. வெளிச்சமின்மை பயத்தை அதிகப் படுத்துகிறது. கண்ட கஷ்டங்களை மனம் பன்மடங்கு அதிகப் படுத்தி நினைக்கிறது. ஆனால் விழுந்தால் பிழைக்க முடியுமோ? போகுமிடத்தில் இதனினும் பொறுக்கமுடியாத கஷ்டமிருக்கலாம். சிங்கம் பிடரிமயிரை அசைப்பதாகத் தோற்றம். புலி வாயைப் பிளப்பதாக நினைப்பு. பாம்பு சீறிக்கொண்டு நெருங்குவதாக எண்ணம். "ஐயோ! இனிப் பொறுக்கமாட்டேன்" என்று கதறுகிறான். தன் னினைப்பு சிறிதும் இன்றி விழுகிறான், விழுந்துகொண்டே இருக்கிறான். அப்பா! எவ்வளவுதூரம்! இவன் கதி என்ன!

**குருட்டம்மை** : விரைந்துவரும் மனிதனை ஒரு தெய்வப் பெண் கையேந்தி வாங்குகிறாள். அப்பெண் தன் இரு கண்களையும் மூடிக்கொண்டிருக்கிறாள். மனிதனை மடியில் வைத்துக்கொள்ளுகிறாள். அவனுக்கு வேண்டிய உதவிகள் யாவற்றையும் அவன் கேட்காமல் நேரந்தப்பாமல் செய்

கிருள். உண்ண உணவும் உடுக்க ஆடையும் கிடைக்கின்றன. குறைவு ஒன்றும் இல்லே. கஷ்டம் சிறிதும் இல்லே. மனச் சஞ்சலமே கிடையாது. விஷவிருட்ச ஞாபகம் கொஞ்சமுமில்லே. ஒவ்வொரு நாள் வாழ்க்கையும் முன் நாள் வாழ்க்கையைச் சிறிதும் வேறுபடாமல் ஒத்திருந்தது.

அழகிய அன்னே : இவ்வாறு வாழும் நாளில், ஒரு நாள் பெண் தெய்வத்தைப் பார்த்து மனிதன் கூறினன். "அம்மையே, உன் அன்பு பெரிது..."

"நாளின்பின் நாள்கழிய நாளேயென்ப தொன்றறியாத்
துன்பமறியாத் தொடக்கறியா வாழ்க்கை துய்த்தேன்"

(Paradise Lost : மொழிபெயர்ப்பு, சுவாமி விபுலாநந்தர்)

ஆனல் எனக்கு ஒரே மாதிரி வாழ்க்கையில் பிரியம் குறைந்து வருகிறது. வெளியில் சென்று பல இடங்களேப் பார்த்து வரவேண்டுமென்று பல இடங்களேப்பார்த்து வர வேண்டுமென்று ஆசை வருகிறது. ஆகையால் அவைகளே யெல்லாம் நீ எனக்குக் காட்டவேண்டும். இன்னொரு விஷயம், நான் எங்கிருந்து வந்தேனென்று உன்னேக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று சில நாளாக ஒரு ஆசை இருக்கிறது. இந்த உதவிகளேயெல்லாம் நீதான் எனக்குச் செய்யவேண்டும்.

அதனேக் கேட்ட அன்னே கூறினள். குழந்தாய், அமைதியான வாழ்க்கையை விட்டு ஏன் கஷ்டத்தைத் தேடிக்கொள்ளுகிருய்? அப்பா, எனக்கோ கண்ணில்லே. நீ எங்கிருந்து வந்தாயென்று யானறியேன். ஆனல் நீ என்னிடம் வந்தது முதல் யான் செய்யவேண்டிய கடமைகளில் ஒரு சிறிதும் தவறியதில்லே. பல இடங்களுக்குப் போய்ப் பார்க்க என்னல் முடியாது. ஆனல் என்னே நம்பிப் பிரயோஜனமில்லே. ஆனல் நான் உனக்கு ஒரு உதவி செய்யக்கூடும். எனக்கு ஒரு சகோதரியுண்டு. அவள் என்னேப்போலல்ல. நானே கறுப்பு. அவளோ சிவப்பு. நான் கண்ணில்லாதவள். அவளுக்கு அக்குறையில்லே. நான் படியாதவள். அவள் படித்தவள், அவள் பல நாடுகளேப் பார்த்தவள், பல விஷயங்களே அறிந்தவள். அவளிடம் உன்னே ஒப்புவிக்கிறேன். சில நிமிடம் தியானஞ்செய். அவள் உன்முன் தோன்றுவாள். அவளேயடுத்து வாழ்

வாயாக. ஆனல் என்னை மறந்து விடாதே. நீ தோன்றியதும் காப்பாற்றியவள் யானே. செய்நன்றி மறந்தவர்க்கு உய்வில்லை."

அம் மனிதன் சில நிமிடங்கள் தியானஞ் செய்தான். அழகே உருவெடுத்த பெண் நின்ருள். அறிவு ததும்புங் கண்கள் உயர்ந்த உடைகள். அம் மனிதனை அழைத்துக் கொண்டு பல இடங்களைக் காட்டினள். ஓடிச்செல்லும் ஆறுகள், ஓங்கி வளர்ந்த மலைகள், பாடித்திரியும் பறவைகள், குலாவிக் குதிக்கும் குழந்தைகள், கரைகாணக் கடல்கள்—இவ்வாறு காட்சிகள் பல கண்டான். பல இடங்களைப் பார்த்தான். பல நூல்களைப் படித்தான். பல விஷயங்களைத் தெரிந்துகொண்டான். பல நல்ல மொழிகளைக் கேட்டான். மிகச் சந்தோஷப்பட்டான். பலருடன் பழகினன். அறிவை வளர்த்துக்கொண்டான். அழகிய தெய்வப் பெண் ஊட்டும் அறிவில் உருசியில்லாமலா இருக்கும் ? அவனுக்குத்தான் நினைத்தவாறு படிக்கவும், கேட்கவும், பார்க்கவும், திரியவும், பாடவும், ஆடவும் ஒரு சுயேச்சை இருந்தது. அறிவு வாழ்க்கையே உயர்ந்த வாழ்க்கை என்பதையும் சுயேச்சையே மனிதன் பிறப்புரிமை என்பதையும் நினைக்கும் போதெல்லாம் அவனுடைய மகிழ்ச்சி அளவில்லாது பெருகியது.

இவ்வாறு அறிவு வாழ்க்கை நடத்தும் நாளில் சில கஷ்டங்கள் தோன்றின. களிப்போடும் கருத்தோடும் படிக்கும் போதெல்லாம் தன் உணவை மறந்தான். வெளி விஷயங்களைப் பார்க்கும்போது, ஒரே விஷயம் பல சமயங்களில் பல விதமாகத் தோன்றின. மலை தூரத்தில் பார்க்கும் போது சிறிதாகத் தோன்றியது. கிட்டத்தில் பார்க்கும் போது முழுமலை கண்ணுக்குத் தெரியவில்லை. காலையில் ஒரு மாதிரியாகவும், மாலையில் ஒரு மாதிரியாகவும் தோன்றியது. பார்க்குமிடத்திற்குத் தகுந்தாற்போல் காட்சி மாறுபட்டது. நேற்றுக் காலை பார்த்த காட்சி இன்று காலையில்லை. இருவர் ஓரிடத்திருந்து ஒரு காலத்தில் பார்த்தாலும் இருவருக்கும் வேறுவிதமாகத் தோன்றியது. புத்தகங்களுக்குள் நுழைந்தாலோ இம்மாதிரி இன்னல்கள் இன்னும் அதிகம். பெரியவர்களுக்குள் எவ்வளவு கருத்து மாறுபாடு. முரண்பாடு. சொல்லப்படாதது எத்தனை ? சொல்லப்

பட்டதில் ஜயந்தருவன எத்தனை? இந்த பூரணமற்ற, தவறான, சந்தேகம் மலிந்த அறிவையடையப்பட்ட சிரமங்கள் எவ்வளவு? பட்டும் பயனென்ன? நிறைவின்மை, தவறான எண்ணங்கள், எடுத்ததற்கெல்லாம் சந்தேகம், மனச்சஞ்சலம், அலைந்து கால் தேய்ந்தது, படித்துக் கண் கெட்டுப்போயிற்று. நினைந்து நினைந்து நெஞ்சம் புண் ஆனது. ஆயினும் அன்னைமேல் வைத்த அன்பு தளரவில்லை.

தெய்வத்தாய் : வாழ்க்கையின் புதிர்கள் அதிகரித்துக் கொண்டே வந்தன. பல கேள்விகட்குப் பதில் கிடைத்தன வாயினும், அவைகளில் பல விளக்கமாகவில்லை. மனதில் பதியவில்லை. உயிரொடு கலக்கவில்லை. பலர் சந்தேகங்களை அவன் தீர்த்தாலும், அவன் சந்தேகம் தீரவில்லை. இக் கஷ்டங்களை எல்லாம் அம்மையிடம் தெரிவித்தான், அவளும் அவனுக்கு உதவிசெய்ய எண்ணினாள். அம்மை சொன்னாள். “மகனே, நாங்கள் மூன்று சகோதரிகள். நீ இதுவரை பார்க்காத சகோதரி எங்களிலும் மிகச் சிறந்தவள். அவளை உனக்குக் காட்டித்தருகிறேன். அன்புடன் தியானித்திரு சிலகாலம். ஆர்வத்துடன் அவளே கதியென வெண்ணு. நீ நன்னிலையடைவாய்.”

மனிதனும் அவள் தரிசனத்திற்குக் காத்திருந்தான். கசிந்துருகினான். அம்மை வந்தருள் புரியவில்லை. கவலை கொண்டான். ஏங்கினான். யாவற்றையும் மறந்து அவளையே எண்ணினான். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கினான். நாட்பல சென்றன. கருதிய எண்ணம் கைகூடவில்லை. அவ்வரசியைக் காணா வாழ்க்கையை மதியேன் அவனடியை எவ்வாறாயினும் அடைவேன் - என்று உறுதிகொண்டான்.

ஈங்குனை யடைந்தனன் எனக்கு நின்னிரு
பூங்கழல் அல்லது புகலொன்று இல்லையால் ;
நீங்கிலன் ; நீங்கிலன் ; நின்னை என்றுமே.

கடுந்தவஞ் செய்தான். உற்றார் உறவினர் யாவரையும் மறந்தான். உலகை மறந்து உயிரை மறந்து அம்மையையே கதியென நம்பி இடையறாது தவங்கிடந்தான். கடைசியில் கடைக்கண் நோக்கியது அத்தெய்வம். கண்விழித்தான், கண்டான்.

தீட்சை : தேவி சிம்மாஸனத்து கொலுவீற்றிருந்தாள். அழகிய உருவம் வெண்மையான தூய ஆடை. சாந்தம் ததும்பும் முகம். நெற்றிக் கண்ணுடன் மூன்று கண்கள். நெற்றிக்கண் சிறிதே திறந்திருந்தது. மற்ற இரு கண்ணை யும் மூடியிருந்தாள். தியான நிலையிலிருப்பது போலிருந் தாள். மனிதன் வணங்கினன், வாழ்த்தினன். யாவற்றை யும் அறிந்துகொள்ள விரும்பினன். தேவி அவனை அருகில் அழைத்தாள். படுக்கச்செய்தாள். முகத்தை மடியில் வைத்துப் படுத்தான். 'அம்மா படுத்துக் கண்ணை மூடிக் கொண்டால் நான் எப்படிப் பார்க்கமுடியும் ; என்ருன் ; அம்மை, ' உனக்கென்ன கவலை ' என்ருள். தனது கையால் அவனைத் தடவிக்கொடுத்தாள். உடம்பு மயிர்க்கூச்சல் எடுத்தது என்ன விளையுமோவென்ற பயமும் தோன்றியது. திகைத்துக் கிடந்தான். தாய் தலைகுனிந்து அவன் காதில் ஒரு வார்த்தை சொன்னள். உடனே அவன் மதி கலங் கினன். மயக்கம் எய்தினன். கடல் தன்னை விழுங்குவது போல் தோன்றியது. 'ஏனே இந்த அம்மையிடம் அகப் பட்டுக்கொண்டோம். இனி நமக்கு வருங்கதி என்னமோ ? அறிவை யிழந்து அடிமையாயினேமே !' என்ற பல எண் ணங்கள் ஒரே நொடியில் தோன்றி மறைந்தன. தூங்கிய வன்போல் கிடந்தான். உடலில் ஒரு பிரகாசம் ஏற்பட்டது. சிறிது நேரஞ் சென்றபின் தெளிந்து எழுந்தான். முகத் திலும் ஒரு ஒளி, அன்னையின் மலர்த்தாளில் விழுந்தான். வாயார வாழ்த்தினன் :

" தாயே, தயாநிதியே, நின்னிடம் பெற்ற செல்வம் வேறு யாரிடம் பெற்றேன் ? வேறு யார் பெற்ருர் ? காட்டாதனவெல்லாங் காட்டியருளினய். கேளாதன வெல்லாம் கேட்கச் செய்தாய். என்னே நின் பேரருள். இன்றே மாயத்திரை அறுந்து விழுந்தது. தூய ஞான நாட்டம் பெற்றேன்.

" ஞான நாட்டம் பெற்றபின் யானும்
நின்பெருந் தன்மையுங் கண்டேன் - காண்டலும்
என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன்
நின்னிலை யனைத்தையுங் கண்டேன் என்னை !''

(திருவிடைமருதூர் மும்மணிக்கோவை)

"I hear beyond the range of sound,
I see beyond the range of sight.
New earths, and skies and seas around,
And in my day the sun doeth pale his light"

*—Hendry David Thoreau*

இது அதிசயம்! யாவும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்குகிறது. மரமும் தெரிகிறது. அதன் வேரும் தெரிகிறது. அது இனி அடையும் நிலையுந்தெரிகிறது. தெரியாதது ஒன்றில்லை. நின் அருளைக் கனவிலும் நினைவிலும் மறவேன். நின் அருளே எனக்கினி வாழ்வு. பரவித்துதித்தான். என்புருகிப் பாடினான். ஆனந்தக் கண்ணீருகுத்தான்.

அவன் வாழ்க்கையால் பலர் நன்மையடைந்தனர். அவன் பிறர் அறியாமையை நீக்கினான். ஆறுதல் தந்தான். இருளைப் போக்கினான். இன்னல்களைப் போக்க வழிகாட்டினான். ஒளிபரவியது. சாந்தம் பரவியது. அவனுதவியால் மக்கள் வாழ்க்கை மலர்ந்தது.

**ஆணவம்** : இக் கதை மூலமாக நாம் அறிந்துகொள்ள வேண்டுவது என்னவென்று கவனிப்போம். உயிரானது உடலெடுக்கு முன்னர் ஆணவத்தில் அழுந்திக்கிடக்கிறது. உயிர் அப்பொழுது கிடக்குமிடத்தை ஆணவக்காடு என்றும் கார் இருள் என்றும் பலர் கூறுவர். விஷ விருட்சம்போல் ஆணவம் பரந்து அளவற்றுக்கிடக்கிறது. விஷ விருட்சத்தில் அநேக உயிர்கள். ஆணவத்தில் கிடக்கும் உயிர்கள் எண்ணில. அம்மரத்தில் இரிந்த மனிதன்பேரில் வெளிச்சம் பட்டதுபோல, பெருமானது அருள் உயிர்களின்மேல் படுகிறது. வெளிச்சத்தைப் பார்க்க முடிவதில்லை. அருளையுங் காணமுடியவில்லை. புலி சிங்கம் பாம்பு மனிதன் குதிப்பதற்குக் காரணமாதல்போல், வெறுப்பும் விருப்பும் மூலகன்மமும் பிறப்புக்குக் காரணமாகின்றன. மனிதன் தூரம் குதித்து வெகுதூரம் வந்தான். ஆணவக் காட்டை உயிர் தாண்டிப் பிறப்பெடுத்தபோது அது தன் பிரயாணத்தில் வெகுதூரம் வெகுதூரம் வந்துவிட்டது.

"பல்லுயிர் வெவ்வேறு படைத்தும் அவைகாத்தும்
எல்லை யிழைப்பொழிய விட்டுவைத்துந்—தொல்லையுறும்
அந்தம் அடிநடு வென்றெண்ண வளவிறந்து
வந்த பெரியவழி போற்றி..." (போ. ப. வெண்பா)

இயல்புச் சக்தி : விஷ விருட்சத்திலிருந்து வந்த மனிதனைத் தாங்கியது ஒரு தெய்வப் பெண் என்றும், அவள் எத்தகையள் என்பதும், அவள் செய்த உதவி என்ன என்பதும், பல உதவிகள் செய்தும் அவள் மனிதனுக்கு ஏன் ஆறுதல் தரவில்லையென்றும் நம் கதையில் பார்த்தோம். உயிர் உடலெடுத்ததும், அதற்கு ஒரு சக்தி உடனே ஏற்படுகிறது. அச் சக்தியை இயல்புத்தாயெனலாம். இச்சக்திஉயிர் ஆதி முதலில் உடலெடுத்தபோதும் காணலாம். நம் பூர்வீக சரித்திரத்தில் மக்கள் நிலையைக் கவனித்தாலும் அறியலாம். பிறந்த குழந்தையிலும் இச் சக்தியைப் பார்க்கிறோம். இச் சத்தியை ஆங்கிலத்தில் instinct என்பர். குழந்தை பிறந்த உடனே அதற்குப் பால் சப்பச் சொல்லிக் கொடுப்பார் யார்? இயல்புத்தாய். இயல்பாக எழும் செய்கைகள் தாழ்வதில்லை. தவறுவதில்லை. இயற்கையறிவால் உடலுக்கு வேண்டிய யாவற்றையும் தேடிக்கொள்ளுகிறோம். இயல்பு உதவிமட்டும்கொண்டு வாழ்ந்த ஆதிமனிதனுக்கும் குழந்தைக்கும் கஷ்டங்கள் இல்லை.

அறிவு : மனிதனுக்கு ஒரு காலத்தில் அறிவை வளர்க்க வேண்டுமென்ற ஆசை பிறக்கிறது. இயல்பன்னை அறிவன்னையைக் காட்டியதுபோல், இயற்கையாகவே அறிவில் ஆசை தோன்றுகிறது. ஆதாம் அறிவுதரும் பழத்தை இறைவன் ஆணைக்கு விரோதமாக விரும்பியதும் உண்டதும், அதனால் அறிவுபெற்றதும் யாவரும் அறிந்த கதை.

(தொடரும்)

—

# விநாயகப் பிரபாவம்*

உலகத்திலுள்ள மக்களனைவரும் உயர்வையே விரும்புகிறார்கள். மக்களின் உயர்வு அவர்கள் ஊக்கத்தின் அளவினதாகும். "வெள்ளத் தனையமலர் நீட்டம் மாந்தர்தம் உள்ளத்தனைய துயர்வு" என்ற திருக்குறளை நோக்குக. எடுத்துக்காட்டுவமையணி வாயிலாகத் திருவள்ளுவர் ஊக்கமே உயர்வுக்குக் காரணம் என்பதை இனிது விளக்குகிறார். ஊக்கமுடன் முயற்சிப்போரைத் தடைசெய்து அவர்கள் மனத்தைக் கலங்கவைப்பது இடுக்கண். இவ்விடுக்கண் தெய்வத்தால், பொருளின்மையால், மெய்வருத்தத்தால் வருதல்கூடும். "வெள்ளத்தனைய இடும்பை அறிவுடையான் உள்ளத்தின் உள்ளக்கெடும்" என்ற குறட்குப் பரிமேலழகர் உரை கூறுமிடத்துத் "தன்உள்ளத்தான் ஒன்றனை நினைக்க அத்துணையானே கெடும்" என்று குறிக்கிறார். எவ்வொன்றனை நினைக்க அதன் துணையால் இடும்பை கெடும்? அவ்வொன்றே விக்நேஶ்வரர் என்ற விநாயகர். "பிடியத னுருவுமை கொளமிகு கரியது வடிகொடு தனதடி வழிபடு மவர் இடர்கடி கணபதி" என்று திருஞானசம்பந்தரும் "என்னை நினைந்தடிமை கொண்டென் இடர் கெடுத்துத் தன்னை நினையத் தருகின்றான்......அத்தி முகத்தான்" என்று நம்பியாண்டார் நம்பிகளும் பிறரும் திருமுறைகளுட் கூறுவனவற்றை நோக்குக.

இனி விநாயகர் என்ற சொல்லின் பொருளைச் சிறிது கவனிப்பாம். வி + நாயகர் = நாயகனில்லாதவர் (விமலன் = மலமில்லாதவன் என்பதைப்போல). அதாவது தம்மை நடத்துபவரில்லாதவர், சுதந்திரர், ஈண்டு கடவுட்டன்மைகள் எட்டனுள் ஒன்றாகிய தன் வயத்தனாதல் வலி

---

*கோவூர் ஸ்ரீசுந்தரேசுவரர் ஆலயத்தில் நடந்த பிரஹ்மோத்ஸவத்தில் முதல்நாள் (22-5-39ல்) ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் நிகழ்த்திய உபந்யாசத்தின் சுருக்கம். திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் குறிப்பெடுத்தெழுதியது.

யுறுத்தப்படுதலை நோக்குக. விநாயகருடைய அஷ்டோத்தர சஹஸ்ர நாமங்களுள் ஒன்று "ஓம் அநீஸ்வராய நம:" என்பது. இதன் பொருள் தன்னை நடத்தும் ஈசுவரன் அல்லது நாயகன் இல்லாதவன் என்பதாகும். மேலும் "முதாகராத்த மோதகம் சதாவிமுக்திதாயகம் கலாதராவதம்ஸகம் விலாசலோக ரக்ஷகம் அநாயகைகநாயகம் விநாசிதேபதைத்யகம் நதாசுபாசுநாசகம் நமாமிதம் விநாயகம்" என்ற சுலோகத்தில் அநாயகைகநாயகம் என்ற தொடரை ஆராய்க. அநாயக+ஏகநாயகம் என்ற பதங்களாக இத்தொடர் பிரிகின்றது. அதாவது தமக்கு ஒரு நாயகன் இல்லாத அநாயக நிலையிலும் தாமே எல்லா நாயகர்கட்கும் நாயகராகிய ஏகநாயக நிலையிலும் உள்ளவர் விநாயகர் என்று இத்தொடர் பொருள் தருகின்றது. வி+நாயகர்=விசேஷமான, எல்லோருக்கும் மேலான நாயகர் என்றும் பொருளுண்டு. இவ்விருபொருளும் முடிவில் ஒரு கடவுளையே குறித்தலை நோக்குக.

சிவஞான சுவாமிகள் கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழில் இவ்வுண்மையை அழகாகக் கூறுகிறார்.

"ஏர்கொண்ட தன்னைத் தளைப்பவரும் ஊருநரும் இலரென்ப துலகு தேறற்கு - எடுத்தவெம் பாசமோ டங்குசந்தன் காத்தேந்தி மததாரை சிதறிப், பார்கொண்ட எண்திசைத் தறுகட் களிற்றுடல் பனிப்பச் செவிக்கா லெழீஇப் - பகிரண்ட முற்றும் புகுந்துலாய்க் கலைசையிற் பதியுமோர்களிறு"

இப்பாடலில் விநாயகர் கையிலுள்ள பாசம் அங்குசம் ஆகிய இரண்டும் குறிக்கும் உண்மை அழகாக விளக்கப்படுகிறது. பாசமும் அங்குசமும் யானைப் பாகன் கையிலிருப்பவை. ஆனல் இங்கு யானையிடம் உள்ளன. எனவே இந்த யானையை அடக்கும் பாகர் (அல்லது நடத்தும் நாயகர்) இல்லை, இந்த யானை நாயகனில்லாத விநாயக யானை. பாசமும் அங்குசமும் பாகனிடத்துள்ளவை, இங்கு விநாயகரிடமுண்மையால் இவர் ஒரு பாகராகின்றார். இவர் நடத்தும் யானைகள் யாவை? உயிர்களாகிய யானைகளை நடத்துகிறார். இக்கருத்தை மிக அழகாக,

"மும்மை மலமா மத முற்றுப்போத முழுத்தறியற வீசி
முகிழ்த்தலர் அன்பின் சங்கிலியுதறி முதிர்ந்த அருட்கூடத்

திம்மென நீங்கி வெளிக்கொடு புவன மெனுங்கடுவனமோடி
எப்பாகர்க்கு மடங்கலவாகி யியங்கும் உயிர்க்கரிகள்
தம்மை விடாது தொடர்ந்து பிணிப்பத் தகும் அங்குசபாசம்
தாங்குதல் கண்டும் ''

என்று ஷ்டி பிள்ளைத் தமிழில் மற்ருெரு பாடல் கூறுவதை நோக்குக.

சாதாரண வழக்கத்தில் பெண் தன் கணவனை நாயகன் என்கிருள், வேலைக்காரன் எஜமானனை நாயகன் என்கிருன், வன்னிய குலத்தவர்கள் நாயகர் என்றே பட்டப் பெயர் வைத்துள்ளார்கள். இவ்வாறு கூறப்படுவோ ரெல்லாரும் உடல்பற்றிய நாயகம் செலுத்துபவர்களேயாவர். உயிரைச் செலுத்தும் நாயகம் விநாயகருக்கே உரியது. ஒரு பாகன் யானையை மேடுபள்ளம் தவிர்த்துச் சமபூமியில்நடத்துவான். அஃதே போல் விநாயகரும் உயிர்க்கரிகளை, மேடாகிய விருப்பம் பள்ளமாகிய வெறுப்பு என்பவற்றைத் தவிர்த்துச் சமபூமியாகிய இருவினை யொப்பின் வழிநடத்துகிருர்.

இத்தகைய நாயகரை நாம் அறிந்துகொள்ள வேண்டாமா? " தம்மானை யறியாத சாதியாருளரே" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் கூறுவதை மறக்கலாமா? விநாயகருடைய பெருமைகளைப் பல உபநிடதங்கள் விரிவாகக் கூறுகின்றன. கணபதி உபநிஷத்தில் " த்வம் ஆநந்தமய:த்வம் பிரஹ்ம மய: த்வம் சச்சிதாநந்த அத்விதீயோஸி" என்றும் " த்வம் குணத்ரயாதீத :, த்வம் தேஹத்ரயாதீத:, த்வம் காலத்ரயாதீத :'' என்றும், " சர்வம் ஜகத் இதம் த்வத்தோஜாயதே, சர்வம் ஜகத் இதம் த்வத்தஸ்திஷ்டதி, சர்வம் ஜகத் இதம் த்வயிலயமேஷ்யதி '' என்றும் கூறப்பட்டுள்ளன. இவற்றின் பொருள் சுருக்கமாகக் கீழ்வருமாறு :—விநாயகர் ஆநந்தமயமாயிருப்பவர், பெருமையுடையவர், சச்திதாநந்த ஸ்வரூபி, குணங்கடந்தவர், தேகங் கடந்தவர், காலங்கடந்தவர், முத்தொழில் நடத்துபவர் என்பதாம். இப்பெருங் கடவுளை வழிபடுமாறு இவ்வுபநிடதம் இறுதியில் " யஏவம்வேதா மஹாவிக்நாத் பிரமுச்சதே மஹா தோஷாத்பிரமுச்சதே சர்வ வித்பவதி சர்வ வித்பவதி '' என்று கூறுகிறது.

விநாயகரைப் பிரணவ ஸ்வரூபி என்று கூறுவது அனைவரும் அறிந்த தொன்று. "ஓம் ப்ரண வானன தேவாய நம:" என்ற மந்திரம் அவர் நாமாவளியிலிருப்பதை யறிக. ஓம் என்ற பிரணவம் தமிழ் நாட்டில் பிள்ளையார் சுழியாக மாறிச் சுருங்கிப் பழைய வழக்கில் சாசனங்கள் முதலிய வற்றின் முதலிலும் இறுதியிலும் எழுதப் பெற்றது. பழைய காலத்தில் வேதம் ஓதுவோர் ஓம் என்றே தொடங்குவர். இக்காலத்தில் ஹரி ஓம் என்கின்றனர். பதினொராந் திருமுறையில் மூத்த பிள்ளையார் திருமும்மணிக்கோவையுள் (அ-வது பாட்டில்) அதிராவடிகள் "மொழியின் மறை முதலே...எங்கள் கணபதியே" என்று கூறுவதை மறத்தலாகாது. பிரணவத்துக்கு வரிவடிவமும் ஒலிவடிவமும் உண்டு. வரிவடிவம் விநாயகர் உருவத்திலும் ஒலிவடிவம் அவருடைய ஆற்றலிலும் திகழ்கின்றன. ஓம் என்பது சமஷ்டிப் பிரணவம், அகார உகார மகாரங்களாகப் பிரித்தறிவது வியஷ்டிப் பிரணவம். அ+உ=ஓ என்பது வடமொழியிற் குணசந்தி யெனப்படும் (பாத+உதகம்= பாதோதகம் என்புழிப்போல), ப்ர + நவ = ப்ரணவ (=என்றும் புதியது) என்று வடமொழியிற் புணரும். பிரணவ சப்தம் "முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியனே" என்ற திருவெம்பாவை வாக்கியத்தின் கருத்தை நினைவூட்டுகிறது. "ஓம் இத்யேகாக்ஷரே மந்த்ரஸ்தித : ஸர்வகத சிவ :", "ஓம் இத்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வஸங்தேயோகின : பிரணவம் சர்வவர்நானும் ஜீவபீஜ முதாஹ்ருதம்", ஓம் "நமோ ஹம்பதார்த் தாய சர்வவேதா யத்பத மாமநந்தி தபாம்ஸி சர்வாணிச யத்வதந்தி யதிச் சந்தோ பிரஹ்மசரியம் சரந்தி தத்தேபதம் சங்க்ரஹேண ப்ரிவீமி ஓம் இத்யேதத்", "ஹரஸ்ஸர்வஸ்ய ஹரணாத் விபுத்வாத் விஷ்ணுருச்யதே பகவான் சர்வ விக்ஞாநாத் அவநாதோமிதிச்ம்ருத :" என்ற வேதாகம வாக்கியங்கள் பிரணவத்தை ஒரு சிறிது விளக்குவன.

விநாயகருக்குப் பிரணவமேயன்றி விநாயக காயத்ரி என்ற மந்திரமு முண்டு. பதினறுவகை மூர்த்தங்கள் விநாயகருக்குண்டு. கலியாண மாகாத ஒருவனைப் பார்த்து நம்மவர் "விநாயகருக்குப் பெண்பேசி முடித்தால் இவனுக்கும்

முடியும்" என்று கேலி செய்கின்றனர். இது பெரும் பாவம். விநாயகருக்கு சித்தி, புத்தி, வல்லபை என்ற மூன்று சக்திகள் உண்டு. பல ஆலயங்களில் தேவிமார் களுடன் விநாயகர் காட்சியளிக்கிறார்.

விநாயகருடைய உருவத் திருமேனியை உற்று நோக்கினால் பல அரிய உண்மைகள் புலனாகும். அவர் ஆணுமல்லர், பெண்ணு மல்லர், அலியுமல்லர். தலை யானைத்தலை, உடல் தேவ வுடல், கால் பூதக் கால், ஒற்றைக் கொம்பு முதலிய உறுப்புக்கள் உணர்த்தும் உண்மையை மிக அழகாகச் சிவஞான சுவாமிகள் அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ் காப்புச் செய்யுளில்,

" மணிகொண்ட கோடொரு மருங்குண்மையாற் பெண்மைவடி
வென்றுமஃ தின்மையோர்
மருங்குண் மையாலாண் மைவடிவென் றுமீதுகீழ்
மாறியதிருக் காட்சியால்
அணிகொண்ட உயர்திணையதென்று மஃறிணை யென்றும்
யார்க்கும் கிளக்க அரிதாம்
ஐங்கரச் சிந்துரத்தின் கழற்செஞ் சரணம்
அஞ்சலித்துத் துதிப்பாம் "

என்று விவரித்தலைக் கண்டு மகிழ்க.

யானைக்குக் கன்னத்தில் மதஜலம் கசிவது வழக்கம். அஃதேபோல் விநாயகருக்கும் கன்னத்தில் மதம் பொழிகின்றது. என்ன மதம்? வலப்பக்கம் அறக்கருணையும் இடப்பக்கம் மறக்கருணையுமாகிய மதங்கள். " கருணை யென்னும் வெள்ள மதம் பொழிசித்தி வேழத்தை நினைந்து வருவினைகள் தீர்ப்பாம் " என்று பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்துட் கூறுவதையும் " மதப்பேர் பெற்ற அருள் " என்று செந்தில் நிரோட்டக யமக அந்தாதி காப்புச் செய்யுள் கூறுவதையும் நோக்குக.

விநாயகருக்குள்ள பல பெயர்களுள் தமிழ்நாட்டில் தாழ்ந்த அறிவுடைய மக்களுக்கும் தெரிந்தது பிள்ளையார் என்பது. முதலியார், செட்டியார், சாஸ்திரியார் என்ற சாதிப் பெயர்களுள் வரும் ஆர் விகுதி பிள்ளைமார் என்ற

விடத்துக் காணப்படுவதில்லை. பிள்ளையார் என்ற சொல் பிள்ளைமாரைக் குறிக்காது விநாயகரையே குறிக்கும். முருகன், வீரபத்திரன், விநாயகன் ஆகிய மூவரும் சிவ குமாரர்களாயினும் பிள்ளையார் என்ற சொல் விநாய கரையே குறிக்கும். பிள்ளையார் கோயில் என்ருல் விநாய கர் கோயில் என்று பொருள் படுமே தவிர முருகன் கோயில் வீரபத்திரன் கோயில் என்று பொருள் படுவ தில்லை. இதிலிருந்து விநாயகரே சிறந்த பிள்ளையாகக் கருதப் படுதல் விளங்கும். இதற்குத் தகுந்த காரணமு முண்டு. சிறந்த பிள்ளை தாய் தந்தையரை வணங்கும், வழிபடும். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம். குருவும் கடவு ளும் பின்னறி தெய்வங்களே. பிள்ளையாருக்கு ஐந்து கை களுண்டு. துதிக்கையில் குடங்கொண்டு நீர் திரட்டித் தமது அம்மையப்பரைப் பூசிக்கிருர். சதுர்புஜங்களுள் பின் னுள்ள இரண்டினில் உயிர்களாகிய நமக்காகப் பாசாங் குசங்களை வைத்துள்ளார். முன் கைகளுள் வலது கையில் ஒடித்த கொம்பு கொண்டு கயமுகா சுரனைக் கொன்று தேவர்களைக் காப்பாற்றுகிருர். இடது கையில் மோதகம் தமக்கென வைத்திருக்கிருர். எனவே ஐந்து கைகளுள் தமக்கொன்று, தேவர்க்கொன்று, தாய் தந்தையர்க் கொன்று, நமக்கேன்றிரண்டு உபயோகிக்கிருர். இவ்வுண் மையை அழகாகக் கச்சியப்ப முனிவர் தணிகைப் புராணத்துள்,

"பண்ணியம் ஏந்தும் கரம் தனக்காக்கிப் பானிலா மருப்பமர் திருக்கை, விண்ணவர்க்காக்கி யரதனக்கலச வியன்கரம் தந்தைதாய்க் காக்கிக், கண்ணிலாணவ வெங்கரி பிணித்தடக்கிக் கரிசினேற் கிரு கையுமாக்கும், அண்ணலைத் தணிகை வரைதளர் ஆபத்சகாயனை அகந்தழீஇக் களிப்பாம்"

என்று கூறுகிருர்.

தமக்கும் தாய் தந்தையர்க்கும் தேவர்க்கும் ஒவ்வொரு கையையும் நமக்கு மட்டும் இரண்டு கைகளையும் உபயோகிக் கும் விநாயகர் நமக்கு வேண்டுவன வெல்லாம் தருவார். நமக்கு வேண்டுவன இவையென்பதை நாமறியோம். நாம் விரும்புவனவற்றையே வேண்டுகிரும். இது தவறு.

நமது பக்குவமறிந்து வேண்டுவனவற்றை நாம் கேளாமலே அவர் தருவார். "கூடும் அன்பினிற் கும்பிடலேயன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினுர்" என்ற திருவாக்கின் படி வழிபாடொன்றே நமக்குரியது. பிள்ளையார் பூசை நாடோறும் செய்து வழி படுவோரிடத்திலே இலக்குமி என்றுமிருப்பாள்.

" நல்லார் பழிப்பில்...விநாயகனே என்று மெய்ம்மகிழ
வல்லார் மனத்தன்றி மாட்டாள் இருக்க மலர்த்திருவே "

என்று கபிலதேவ நாயனுர், மூத்த நாயனுர் திருவிரட்டை மணிமாலை இறுதிச் செய்யுளுட் கூறுவதை என்றும் ஞாபகத்து வைக்கவும்.

நமக்குள்ள ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களையும் விநாயகரே போக்குவார். விநாயகரை வழிபடும் அன்பர்களை ஆணவமலம் துன்புறுத்த எண்ணுவது நெருப்பைக் கடித்துத் துன்புறுத்த எறும்பு எண்ணுவதற்குச் சமானம் என்று நம்பியாண்டார்நம்பிகள் உவமைச் சுவை மலியக் கூறுகிருர்.

" மருப்பை யொருகைக் கொண்டு நாரையூர் மன்னும்
பொருப்பை யடிபோற்றத் துணிந்தால்—நெருப்பை
அருந்த எண்ணுகின்ற எறும்பன்றே அவரை
வருந்த எண்ணுகின்ற மலம் "

அவ்வாறே கன்ம மலமும் நசிக்கும் செய்தியைக் கபில தேவ நாயனுர்,

" கணங்கொண்ட வல்வினைகள் கண்கொண்ட நெற்றிப்
பணங்கொண்ட பாந்தட் சடைமேல்—மணங்கெண்ட
தாதகத்த தேன்முரலுங் கொன்றையான் தந்தளித்த
போதகத்தின் தாள்பணியப் போம் "

என்று கூறுகிருர்.

மாயாமலம் அகல்வதை அதிராவடிகள் " மணிசிந்து கங்கைதன் மாணக்குருளைய...பிடித்தோர்க்கில்லை பேறு

றலே" என்று கூறுகிறார். ஒளவையார் அகவலுள் "மாயாப் பிறவி மயக்கம் அறுத்து" என்பதும் நினைதற்பாலது.

விநாயகருடைய நிறம் சிவப்பு. சில கோயில்களில் சிவப்புப்பொடி பூசிய விநாயக உருவங்களைக் காணலாம். சிவப்பு வஸ்திரம் சிவப்புப் புட்பங்கள் முதலியன விநாயகருக்குப் பிரீதியானவை என்று நூல்கள் கூறுகின்றன. விநாயகருக்குரிய நைவேத்திய வகைகளை அருணகிரிநாதர் "இக்கவரை நற்கனிகள் சர்க்கரை பருப்புடன்நெய் எள்பொரிய வல்துவரை இளநீர்வண் டெச்சில் பயறப்பவகை பச்சரிசி பிட்டுவெள ரிப்பழம் இடிப்பல்வகை தனிமூலம் மிக்கஅடி சிற்கடலை பக்ஷணம்" என்றும், "முப்பழம் அப்பமும் நிகழ் பால் தேன் நெடியவளை முறி இக்கொடு லட்டுகம் நிரவில் அரிசி பருப்பவல் எள்பொரி நிகரில் இனிய கதலிக்கனிவர்க்கமும் இளநீரும்" என்றும் கூறுகிறார். விநாயக சதுர்த்தி முதலிய சிறந்த நாட்களில் ஆயிரம் மோதகம் நிவேதனம் செய்வது சிறந்ததென நூல்கள் கூறுகின்றன.

விநாயகர் குருவாக வந்து உபதேசம் செய்து அருள் புரிவதை ஒளவையார்,

"குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளி"

என்று கூறுகிறார். முத்தி தருவதையும் "இருத்தி முத்தி இனிதெனக் கருளி" என்று குறிக்கிறார். ஒளவையாரைத் தும்பிக்கையாற்றூக்கித் திருக்கோவலூரிலிருந்து விண்ணுலகிற் சேர்ப்பித்த விநாயகர் உதவியும் மறத்தற் பாலதன்று. நாமும் விநாயகரை வழிபட்டு மேல்நெறி சேருவோமாக.

---

# பேரன்பர் மறைவு

நமது மதிப்பிற்குரிய பேரன்பர் சைவத்திரு, இராயப் பேட்டை வே. தியாகராய முதலியாரவர்கள் பெருமான் திருவடியை அடைந்தது குறித்து நாம் மிகவும் வருந்துகின்ரும். அவரைத் தெரியாத சமய அன்பினர் ஒருவரும்



இல்லை. பல ஆண்டுகளாகச் சமாஜத்தின் செயற்குழு உறுப்பினராகவும், சில ஆண்டுகள் சித்தாந்தத்தின் துணை ஆசிரியராகவும் இருந்து நல்ல முறையில் செயலாற்றி வந்திருக்கின்ருர். சித்தாந்தத்தில் தமது அரிய கருத்துக்களை வெளியிட்டும் இருக்கின்ருர். அன்ஞர் குடும்பத்தில் ஒவ்வொருவரும்ஆழ்ந்த சைவ அன்பும் சைவக் கருத்துக்களும் நடைமுறையில் கொண்டவர்கள். சமாஜ ஆண்டு விழாக்கள், திங்கள் விழாக்கள், செயற்கூட்டங்கள் முதலியவைகள் எங்கு நடந்தாலும் தவருமல் சென்று பங்கெடுத்துக் கொள்வார்கள். அண்மையில் கண் சிறிது மங்கலான காலத்திலும்கூட சமாஜத்தின் நன்மைகளே நினைவாகக் கொண்டிருந்தவர். அன்ஞர் திடீரென்று இறைவன் திருவடியை அடைந்தது சமாஜத்திற்கு ஒரு ஈடு செய்யமுடியாத இழப்பு என்று சொல்லலாம். அன்ஞருடைய உறவினருக்குச் சமாஜத்தாருடைய நன்றி கலந்த அனுதாபத்தைத் தெரியப்படுத்திக்கொள்ளுகின்ரும். அன்ஞருடைய ஆன்மா அம்மையப்பர் திருவடிகளில் அமைதி பெறுவதாகுக.

Regd. M. 2330 "SIDDHANTHAM" Vol. 30—No. 6

## சைவ சித்தாந்த மகா சமாஜம்,

# பொன்விழா மலர்

மிக மிகக் கவர்ச்சியான வெளியீடு. இதில் ஐம்பத்தொரு கட்டுரைகள் உள்ளன. சமாஜத்தின் ஐம்பது ஆண்டுகளின் நிகழ்ச்சிகள் தெளிவாக எழுதப் பெற்றுள்ளன. ஐம்ப தாண்டுகளில் நடந்த நிறைவு விழாக்களின் தலைவர்கள் ; நடைபெற்றஇடங்கள்; மங்கையர் மாநாடு, இளைஞர் மாநாட்டு விவரங்கள் ; சமாஜத் தொண்டர்கள் தொண்ணூற்றொருவர் பற்றிய குறிப்புக்கள்; உயர்திருவாளர்கள்: ஞானியார் சுவாமி கள், மறைமலையடிகள்,ஜே.எம்.நல்லசாமிப்பிள்ளை,ஸர். பொன் னம்பலம் இராமநாதன்,பொன்விழாத்தலைவர்கனம்சு. நடேசப் பிள்ளை, திரு.வி.க. முதலிய முப்பதின்மர் உருவப்படங்கள் ; வேறு பற்பல சிறப்புக்கள் இதில் மிளிர்கின்றன. கட்டுரை யாளர்களுள் டாக்டர் அ.சிதம்பரநாதன்செட்டியார், டாக்டர் வ. ஆ. தேவசேனாபதி, தணிகைமணி ராவ்பகதூர் வ. சு. செங்கல்வராயப் பிள்ளை, சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார், சித்தாந்த சிகாமணி க. வச்சிரவேல் முதலியார், சித்தாந்த ரத்னாகரம் முத்து சு. மாணிக்கவாசக முதலியார், திரு. அ. மு. பரமசிவானந்தம் முதலியோர் உள்ளனர். இரு நூற்று நாற்பது பக்கங் கொண்ட அழகிய பதிப்பு.

**விலை ரூபா ஒன்று.** ரிஜிஸ்தர் தபாற்கூலி அணா பன்னிரண்டு. உடனே முன்பணம் அனுப்பிப் பெற்றுக் கொள்க. வி. பி. மூலம் அனுப்பப்படமாட்டாது.

கிடைக்கும் இடம் :

**பாரி நிலையம்,** 59, பிராட்வே, சென்னை—1.

Printed at the Sadhu Press, 15, Ganapathi Mudali Street, Royapettah by D. Mangayarkarasi and V.K. Punithavathi. Edited by C M Ramachandran Chettiar, B..A, .B.L., and Published by S.Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva Siddhanta Maha Samajam, 2. Seetha Rama Nagar, Cuddalore N. T.